# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 5 திருவள்ளுவர் ஆண்டு 2051 அக்டோபர் திங்கள் - 2020



மருத்துவக் கலைச்சொற்கள்

பூந்தமிழின் பூக்கள்

செந்தமிழின் சிலேடைச் சுவை

சித்த மருத்துவம்– ஒரு விளக்கவுரை

துரவு – விளக்கமும் வகையும்

தேவநேயப்பாவாணர், வீரமாமுனிவர் விருது – 2020

# மருத்துவக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| 1. Actinotherapy | – | கதிர் மருத்துவம் |
| 2. Cardio walk | – | நெஞ்சக நலநடை |
| 3. Electro cardiogram | – | இதயத்துடிப்பலை அளவி |
| 4. Electro Therapy | – | மின் மருத்துவம் |
| 5. Flexibility walk | – | நெகிழ் நடை |
| 6. Somnambulance | – | துயில் நடைநோய் |
| 7. Somnabulist | – | துயில் நடையர் |
| 8. Bronchial pneumonia | – | மூச்சுக்குழல் சளிக் காய்ச்சல் |
| 9. Gynecology | – | மகளிர் நோயியல் |
| 10. Haemangioma | – | குருதி நாளப் புற்று |
| 11. Hay-fever | - | மூக்கழற்சிக்காய்ச்சல் |
| 12. Head-shrinker | – | மனநல மருத்துவர் |
| 13. Hematonosia | – | குருதி நோய் |
| 14. Meat borne zoonosis | – | இறைச்சிவழிப் பரவும் நோய் |
| 15. Osteoarthritis | – | எலும்பு மூட்டழற்சி |
| 16. Ostectomy | – | என்பு நீக்கறுவை |
| 17. Pedal edema | – | கணுக்கால் வீக்கம் |
| 18. Aeipathy | – | கட்டுப்பாடற்ற நோய் |
| 19. Bacillus | – | நோய் நுண்மி |
| 20. Balneotherapy | – | நீராட்டு மருத்துவம் |
| 21. Bio-medicine | – | உயிரி மருந்து |
| 22. Biopharming | – | உயிரி மருந்தாக்கம் |
| 23. Catatonia | – | உடலியக்கமிலா நோய் |
| 24. Chiropractor | – | நீவு மருத்துவம் |
| 25. Contagious fever | – | தொற்றுக் காய்ச்சல் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - சார்வரி புரட்டாசி
அக்டோபர் 2020

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

அன்பானவர்களே!

'சொல்வயல்' மின்னிதழைப் பார்த்து, படித்து, பாராட்டிக் கொண்டிருக்கின்ற அன்பர்களுக்கு நன்றி. ஆகத்துத் திங்கள் மிகவும் பரபரப்பான திங்களாகக் கடந்திருக்கிறது. தமிழ்நாட்டின் 38 மாவட்டங்களிலிருந்தும் ஏராளமான மாணவ–மாணவியர் எங்களைத் தொடர்பு கொண்டு "நாங்களும் தூயதமிழில் பேச உறுதி பூண்டுள்ளோம்" என்று கூறும்போது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. அத்தகைய மாணவர்களுக்கு இவ்வியக்ககம் தொடர்ந்து தேவையான உதவிகளைச் செய்யும். இவ்வியக்ககம் தொடங்கப்பெற்றபோது இதன் நோக்கம் அகராதிகளைத் தொகுத்துப் பொதுமக்களுக்கு வழங்குவதாக இருந்தது.

ஆனால் இன்றைய நிலையில் அந்த எல்லை வரையறையைத் தாண்டி பிறமொழித் தாக்கத்திலிருந்து தமிழ் மொழியைக் காத்து, தூய தமிழ்ச் சொற்களை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லும் ஆக்கப் பணியையும் இவ்வியக்ககம் செய்து வருகிறது. அடுத்த தலைமுறை என்பது இன்றைய மாணவர்களே என்பதால் மொழிக் காப்பில் மாணவர்களின் பங்கை உணரவைக்க அவர்களை மனத்தில் கொண்டே திட்டங்கள் வகுக்கப்பெற்று அவை வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

கடந்த 11.03.2020ஆம் நாள் 'தமிழ் அகராதியியல் நாள் நிறைவு விழா'வை மாணவர்களைக் கொண்டு சிறப்பாக நடத்தியது போலவே வருகின்ற நவம்பர் எட்டாம் நாள் வீரமாமுனிவரின் பிறந்தநாள் விழாவையும் ('தமிழ் அகராதியியல் நாள் விழா') இளம் தலைமுறையினரைக் கொண்டே கொண்டாட திட்டமிடப்பட்டுள்ளது. அந்நாளில் வழங்கப்பெறும் 'தூய தமிழ்ப் பற்றாளர் பரிசுக்காக' ஏராளமான மாணவர்களும் விண்ணப்பித்துள்ளனர். அதே நாளில் வெளியிடவுள்ள 'அகராதி ஆய்வு மலர்– 2020'க்காக ஏராளமான கட்டுரைகள் வந்திருக்கின்றன.

நவம்பர் திங்களுக்குள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிகளின் திருந்திய பதிப்பை 8050 பக்கங்கள் கொண்ட ஏழு மடலங்களாக வடிவமைத்து வெளியிடவும், அதனொடு சேர்த்து மாணவர் இலக்கியத் தமிழ் அகரமுதலி, நடைமுறைத் தமிழ்ப்பேரகராதி, அயற்சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்கள் அகராதி ஆகிய மூன்று அகராதிகளையும் வெளியிட முயற்சிகள் மேற்கொண்டுள்ளோம். இவ்வியக்ககம் நடத்திய பல்வேறு நிகழ்ச்சிகளின் வாயிலாக முப்பதாயிரத்திற்கும் அதிகமான மாணவர்களுக்குத் தாய்மொழி விழிப்புணர்வை ஊட்டியிருக்கின்றோம். இயக்ககத்தின் வழிகாட்டுதலோடு ஆங்காங்கே பல இளைஞர் அமைப்புகள் தூயதமிழ்த் திட்டத்தை மற்ற மாணவர்களிடம் எடுத்துச் செல்லும் பணியையும் செய்து வருகிறார்கள்.

இயக்ககத்தோடு இணைந்து தூய தமிழ் நிகழ்ச்சிகளை நடத்த பல்வேறு அமைப்புகள் முன்வந்துள்ளன. குறிப்பாக, சென்னை தாம்பரம் சனோடாரியம் தேசிய சித்த மருத்துவ நிறுவனம் இவ்வியக்ககத்தோடு புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்துகொண்டு சித்த மருத்துவக் கலைச் சொற்களைத் தொகுத்து வழங்குவதாக உறுதி அளித்துள்ளது.

திருவாவடுதுறை, தருமை, திருப்பனந்தாள் ஆதீனங்கள் இவ்வியக்ககத்தோடு இணைந்து தமிழ்ப் பணியாற்ற முன் வந்துள்ளன. கோவை பாரதியார் பல்கலைக்கழக மாணவர்கள் சொல்லாக்கப் பயிற்சி பெறுவதற்கு எங்களை நாடியுள்ளனர். பூம்புகார், தரங்கம்பாடி பகுதிகளில் உள்ள கல்வி நிறுவனங்கள் பழைமையான மீனவக் கலைச்சொற்களை மீட்டுருவாக்க இவ்வியக்ககத்தின் உதவியை வேண்டியுள்ளனர்.

இதுவரை மண்ணுக்குள் வயிரமாக இருந்துவந்த இவ்வியக்கக அகராதிகள் இப்போது தமிழன்னைக்கு அணிகலனாக மாறி அழகுபடுத்திக் கொண்டிருக்கின்றன என்று பலர் பாராட்டுகிறார்கள்.

இந்தப் பாராட்டுகள் அனைத்தும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களுக்கும், மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் அவர்களுக்கும் உரியதாகும். அவர்களுடைய ஊக்குவிப்பும், ஒத்துழைப்பும், தமிழ் மீதான அவர்களுடைய பற்றும்தான் இவ்வியக்ககத்தின் வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்திருக்கின்றன.

மீண்டும் சந்திப்போம்.

# அறிய வேண்டிய அரிய செய்தி - 5

## ‘உணவு வகைகள் அன்றும் இன்றும்’

“மாறுபாடு இல்லா உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு” (குறள். 945)

என்பது வள்ளுவர் வாய்மொழி. திருவள்ளுவர் மருந்து என்ற அதிகாரத்தில் உணவு முறைகளை விளக்கியுள்ளதிலிருந்து உணவை மருந்தாகப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தை உணரலாம். மருந்தே உணவு. உணவே மருந்து என்று சொல்வதை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவர் பெருந்தகை கூறியிருப்பதிலிருந்து அதனை, உடல்நலம் சார்ந்த பதிவாகக் கொள்ளலாம். உணவு வகைகள் அன்றும் இன்றும் என்ற பொருண்மையில் அன்று என்பதைக் கழகக்காலம், அறஇலக்கியக் காலம் என்று யாரும் எண்ணி விட வேண்டாம். நம் பாட்டன், பாட்டி, பெற்றோர் வாழ்ந்த அல்லது வாழ்கின்ற காலத்து உணவு வகைகளையும், உண்டமுறைகளைப் பற்றியும் இனிக் காணலாம்.

**அன்றைய உணவுமுறை**

முதற்கண் அரிசி, சிறு தவசங்களைப் பற்றி பார்ப்போம். நெல்லின் வகைகளாக மட்டச்சம்பா, கார்த்திகைச் சம்பா, மட்டக்காரி போன்றவற்றை ஆறு மாதப் பயிர்களாக வேளாண்மை செய்தனர். சிறிதும் வேதியல் உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள் பயன்படுத்தாமல் இயற்கை உரங்களான இலைதழைகள், மாட்டுச் சாணம், வேப்பம் புண்ணாக்கு இவைகளைப் பயன்படுத்தி விளைவித்தனர்.

மேலும் சிறு தவசங்களான சோளம், கம்பு, கேழ்வரகு, தினை, சாமை, குதிரைவாலி போன்றவற்றை மானாவாரியில் பயிர்செய்து விளைந்தவற்றைக் குதிர், மச்சு, போன்றவற்றில் சேமித்து வைத்துத் தேவைப்படும்போது பயன்படுத்தி வந்தனர். இவற்றில் ஊடுபயிராகக் காராமணி, சிறுபயறு, மொச்சை, சுண்டைக்கடலை, துவரை போன்றவற்றை விளைவித்துச் சேமித்து வைத்துக் கொண்டனர். கைக்குத்தல் அரிசியை வைத்து இரவு ஒருவேளை மட்டும் உணவு சமைத்தும், தோட்டங்களில் விளைந்த காய்கறிகளைக் கொண்டு குழம்பு வைத்தும் சோற்றின் அளவிற்கு இணையாகக் காய்கறிகளை வைத்தும் உண்டனர். பகல் இரு வேளைகளும் சிறுதவசங்களில் ஏதேனும் ஒன்றினால் செய்த கூழைப் பயன்படுத்தி வந்தனர். சோளம், கம்பு இவற்றை ஊறவைத்து உரலில் இட்டுக் குற்றி மாவாக்கி அதனைக் கூழாக்குவார்கள்.

இரவில் சமைத்த அரிசிச்சோற்றில் தண்ணீர் ஊற்றி மறுநாள் அந்த நீராகாரத்தை அதாவது நீர்ச்சத்துத் தண்ணியைக் கூழுக்கு ஊற்றிக் கொள்வார்கள். காலையில் தொடுகறியாக இரவில் வைத்த வெஞ்சணம் அல்லது பயறு வகையில் செய்த துவையலையே பயன்படுத்துவார்கள். குளம், குட்டை, ஏரி, கண்மாய் ஆறு போன்ற நீர்நிலைகளிலிருந்து நீரைக் குடிநீராகப் பயன்படுத்துவதால் ஊட்டப் பொருள்கள் முழுதும் நீரினால் பெற்றுவிடுவார்கள். இந்நீர்நிலைகளில் உடல் முழுதும் மூழ்கி நீராடுவார்கள். இவ்வாறு இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டதால் நீண்ட வாழ்நாளுடன் நோயின்றி வாழ்ந்திருந்த நிலையை உணரலாம். வள்ளுவர் கூறிபடி வாழ்ந்து வந்தனர் என்பதையறிலாம்.

**இன்றைய உணவுமுறை**

இன்றைக்கு நாம் பயன்படுத்தும் அரிசியானது மரபணு மாற்றம் செய்து குறைந்த நாள்களில் விளைவதாகும், வேதிப்பொருட்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள் பயன்படுத்தி விளைந்த நெல்லின் அரிசியைத்தான் உணவாக உட்கொள்கிறோம். சாலை ஓரங்களில் கரும்புச்சாறு பிழிவதைப் பார்க்கிறோம். அதிலிருந்து வரும் கரும்புச்சக்கை போன்றதே இன்று உண்ணும் அரிசிச்சோறாகும். மேலும் சோற்றை அடுகலன்களில் சமைத்து நீரை வடிக்காமல் உண்பதால் நாம் அறியாமல் நஞ்சையும் சேர்த்தே உண்கிறோம்.

இன்றைக்கு விளைவிக்கும் காய்கறிகள்கூட மரபணுமாற்றம் செய்தவைகளே. இவ்வகையான காய்கறிகளைப் பூச்சி அரிப்பதைக் காணமுடியாது. பூச்சிகளே வெறுக்கும் உணவையே நாம் விரும்பி உண்கிறோம். தேநீர் பருகும் நெகிழிக் குவளையில் உட்பக்கம் தேநீர் ஒட்டாமல் இருப்பதற்கு ஒருவகை மெழுகு பூசியிருப்பதை உணராமல் பருகி வருகிறோம். குளிர்பதனப் பெட்டியில் வைத்த உணவுப் பொருள்களை மறுநாள் பயன்படுத்துவது நஞ்சை உண்ணுவதற்கு ஒப்பாகும். சாலை ஓரங்களில் உள்ள விரைவு உணவகங்களில் வறுத்த சோற்றில் சுவையூட்டக் கலப்பது அத்தனையும் நச்சுத்தன்மையது. சிறார்களுக்கு வாங்கித்தரும் நெகிழிப்பையில் அடைக்கப்பட்ட உணவுகள் அனைத்துமே நஞ்சுதான்; மறக்க வேண்டாம்.

**பாலால் பாழாகும் பண்பாடு**

அன்று நாட்டு ஆ(பசு)வின் பாலைப் பருகி வந்தோம். இன்றைக்கு வெளிநாட்டு செர்சி (ஜெர்ஸி) போன்ற கலப்பின மாட்டுப் பாலை உட்கொள்கிறோம். இப்பாலைக் குடிக்கும் சிறுவர் சிறுமியர்கள் தங்களின் அகவைக்கு மீறி உடல் வளர்ச்சியடைகின்றனர். சிறுமிகள் குறைந்த அகவையில் பூப்பெய்திவிடுகிறார்கள். இதனால் ஏதுமறியா இளம் அகவையிலேயே அவர்கள் எண்ணிலடங்கா இன்னல்களைச் சந்திக்க நேர்கிறது. இலங்கை, பர்மா போன்ற நாடுகளில் பால் இல்லாத கடுந்தேநீர் பருகிவருகிறார்கள். இதை நாமும் பின்பற்றப் பழகலாம். மொத்தத்தில் இன்றைய உணவு, உறைவிடம், காற்று, நீர், இவையனைத்தும் நச்சுத்தன்மையுடையன என்பதை உணர்ந்து இயற்கையோடு இயைந்த எளிய வாழ்கை முறையை வாழப் பழகலாம்.

சு.வீரவேலு
பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்

# பூவெல்லாம் பூவல்ல!

## (பூந்தமிழ்ச் சொல்லில் பூக்காத பூக்களுமுண்டு)

அகப்பூ = மனமகிழ்சி

முப்பூ = சித்தமருந்து

ஒருபூ = நிலத்தின் ஒரு விளைவு (போகம்)

இருபூ = நிலத்தின் இரு விளைவு

கடைப்பூ = நிலத்தின் கடைசி விளைவு

பெரும்பூ = நிலத்தின் ஆண்டு வருவாய்

இலவங்கப்பூ = காதணிவகை

உச்சிப்பூ = குழந்தைகளின் தலையணிகளுள் ஒன்று

கற்பூ = மகளிர் அணியும் காதணி

கன்னப்பூ = காதணி வகை

போர்ப்பூ = நுதலணி மாலை

எட்டிப்பூ = எட்டிப் பட்டம் பெற்ற வணிகர்கட்கு அரசர்களால் கொடுக்கப் பெறும் பொற்பூ

காவிதிப்பூ = காவிதி என்னும் பட்டத்துடன் அரசர் அளிக்கும் பொற்பூ

ஊற்றுப்பூ = தேங்காய்ப் பிண்ணாக்கு

கதலிப்பூ = பச்சைக்கற்பூரம்

வெற்றிப்பூ = இலவம் பஞ்சு

சின்னப்பூ = நேரிசை வெண்பாவால் பத்துறுப்பு (தசாங்கம்) அமைத்துச் செய்யுள் பாடுவது

மருபூ = பாலை நிலம்

வாடற்பூ = பொங்கர்

ஒன்னப்பூ = மாதர் காதணியுள் ஒன்று

நன்றி–

சி.பூ.மணி

உலகத் தமிழ்க் கழகம்

பெங்களூரு – உக

தமிழ்நாடு அரசு

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

**நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,**

**எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை- 600 028**

: 14469 (அ) 1800-599-14469 : agarathimalar2020@gmail.com



# வீரமாமுனிவர் விருது-2020

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள, தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத, பிறப்பால் வெளிநாட்டைச் சார்ந்த தகுதிவாய்ந்த அறிஞருக்கு 'வீரமாமுனிவர் விருது' தமிழ்நாடு அரசால் வழங்கப்பெறவுள்ளது. விருதாளருக்கு ரூபாய் ஒரு இலட்சமும் ஒரு சவரன் தங்கப் பதக்கமும் தகுதியுரையும் வழங்கப்படும். விருதுபெறுவதற்குத் தகுதிவாய்ந்த தமிழறிஞர்கள் சொற்குவை.காம். (sorkuvai.com.) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தை நிரப்பி மேற்குறித்துள்ள மின்னஞ்சல் வழியாகவோ அல்லது இயக்குநர், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், நகர் நிருவாக அலுவலக வளாகம் முதல்தளம், எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை-600 028 என்ற அஞ்சல் முகவரிக்கோ அனுப்ப வேண்டும். விண்ணப்பம் வந்து சேர வேண்டிய கடைசி நாள்: 10.10 2020, மாலை : 5:45மணிக்குள்.

**இயக்குநர்**

# செந்தமிழின்

## சிலேடைச் சுவை

உவமை, உருவகம், பொருள்கோள், சிலேடை உள்ளிட்டவையெல்லாம் சொல்லின் சுவைகூட்டி அதன்மூலம் மொழியின் நயம் காட்டி படைப்பை அழகாக்கும் அணியிலக்கணக் கூறுகள். இவற்றுள் சிலேடை என்பது, ஒரு சொல்லோ அல்லது சொற்றொடரோ பலபொருள்படும்படி அமைவதாகும். இதனையே,

"ஒருவகைச் சொற்றொடர் பலபொருள் பெற்றி
தெரிதர வருவது சிலேடை ஆகும்"

என்கிறது தண்டியலங்காரம் என்னும் அணியிலக்கண நூல். மேலும், சிலேடையானது 'செம்மொழிச் சிலேடை', 'பிரிமொழிச் சிலேடை' என இரு வகைப்படும் என்றும் தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது.

ஒரு சொல்லோ சொற்றொடரோ எவ்வித மாற்றத்துக்கும் பிரிப்புக்கும் உள்ளாகாமல் பலபொருள் தருவது 'செம்மொழிச் சிலேடை' ஆகும்.

ஒரு சொல்லோ சொற்றொடரோ மாற்றத்துக்கும் பிரிப்புக்கும் உள்ளாகிப் பலபொருள் தருவது 'பிரிமொழிச் சிலேடை' ஆகும்.

பெரும்பாலும் இருபொருள் தரும் சிலேடைப் பாடல்களே உள்ள நிலையில், சிலர் முப்பொருள் தரும் சிலேடைப் பாடல்களையும் இயற்றியுள்ளனர். கி.பி.15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த காளமேகப் புலவர் சிலேடைப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். அவர் இயற்றிய ஒரு பாடல், பிள்ளையார், முருகன், சிவபெருமான் ஆகிய மூவருக்கும் பொருந்தும் வகையில் முப்பொருள் சிலேடையாக அமைந்துள்ளது.

பிள்ளையார் – முருகன் – சிவபெருமானுக்குச் சிலேடை

"சென்னிமுக மாறுளதாற் சேர்கரமுன் னாலுகையால்
இன்னிலத்திற் கோடொன் றிருக்கையால் – மன்னுகுளக்
கண்ணுறுத லானுங் கணபதியுஞ் செவ்வேளும்
எண்ணவரனும் நேராவ ரே"

(சென்னி – தலை, செவ்வேள் – முருகன், அரன் – சிவபெருமான்)

என்ற இந்த ஒரு பாடலே

**பிள்ளையாரைக் குறிக்கும்போது:**

சென்னி முகம் மாறு உளதால் – தலையில் மனிதமுகம் மாறிய யானைமுகம் உள்ளதால்,

முன் சேர் கரம் – முகத்தில் பொருந்திய துதிக்கை

நாலுகையால் – தொங்குவதால் (நாலுதல் – தொங்குதல்)

கோடு ஒன்று இருக்கையால் – ஒற்றைத் தந்தம் இருப்பதால்

மன்னு குளக்கண் உறுதலானும் – வெல்லம் நிலைத்த நிவேதனமாக இருத்தலானும் என்றும்,

**முருகனைக் குறிக்கும்போது:**

சென்னி முகம் ஆறு உளதால் – தலையில் ஆறு திருமுகம் உள்ளதால்

சேர்கரம் முன் நாலு கையால் – 3x4=12 பன்னிரு திருக்கைகள் அமைந்திருப்பதால்

கோடு ஒன்று இருக்கையால் – கொம்பு போன்ற வள்ளி இருப்பதால்

மன்னு குளக்கண் உறுதலானும் – நிலைபெற்ற சரவணப் பொய்கையில் இருத்தலானும் என்றும்,

**சிவபெருமானைக் குறிக்கும்போது:**

சென்னி முகம் ஆறு உளதால் – தலையில் கங்கையாகிய ஆறு இருப்பதால்

முன்சேர் கரம் நாலு கையால் – விரும்பப்படும் திருக்கைகள் நான்கு இருப்பதால்,

கோடு ஒன்று இருக்கையால் – கொம்பையுடைய காளையொன்று வாகனமாய் இருப்பதால்,

மன்னு குளக்கண் உறுதலானும் – நெற்றியிலே நிலைபெற்ற கண் இருத்தலானும் என்றும்

அமைந்து, பிள்ளையாரும் முருகனும் சிவபெருமானும் சமமானவர்கள் என்று மூவரையும் குறிக்கும் முப்பொருள் சிலேடையாக இப்பாடல் விளங்குகிறது.

இதேபோல், அழகிய சொக்கநாத பிள்ளை என்னும் புலவர் இயற்றிய சிலேடைப் பாடலொன்று திருமாலுக்கும் கைக்கடிகாரத்திற்கும் பொருந்தும் வகையில் இருபொருள் சிலேடையாக அமைந்து இன்சுவை தருகிறது.

**திருமாலுக்கும் கைக்கடிகாரத்திற்குமான சிலேடை**

"சக்கரத்தினால் அரவம் தாங்குதலினோடும் முள்ளெட்டு
அக்கரத்தினால் வேலை ஆர்வதினான் – மிக்க அன்பர்
முக்கியமாய்க் கைக்கொளலான் முத்துசுவாமித் துரையே
கைக்கெடியாரம் திருமால் காண்"

(அரவம் – பாம்பு, ஓசை. எழுத்து என்று பொருள்படும் அட்சரம் என்ற சமற்கிருதச் சொல் அக்கரம் என்றாகியுள்ளது. வேலை – கடல், வேலை)

என்ற இந்த ஒரு பாடலே,

**திருமாலைக் குறிக்கும்போது:**

சக்கரத்தினால் – சக்கராயுதத்தைக் கொண்டிருப்பதாலும்

அரவம் தாங்குதலின் – ஆதிசேசனாகிய பாம்பின் மேல் தாங்கப்படுவதினாலும்

உள் எட்டு அக்கரத்தினால் – நினைத்து வணங்கப்படுகின்ற ஓம் நமோ நாராயணாய என்னும் எட்டெழுத்து மந்திரத்தினாலும்,

வேலை யார்வதினால் – திருப்பாற்கடலில் தங்குவதினாலும்

மிக்க அன்பர் முக்கியமாய்க் கைக் கொளலால் – மிகுந்த அன்பர் முக்கியமாய்க் கை கூப்பி வணங்குவதாலும் என்றும்,

**கைக்கடிகாரத்தைக் குறிக்கும்போது:**

சக்கரத்தினால் – சக்கரமாகிய கருவியை உடையதாலும்

அரவம் தாங்குதலினோடும் – (டிக்..டிக்..டிக் என்ற) ஓசை கொண்டுள்ளதாலும்

முள் எட்டு அக்கரத்தினால் – முள் தொடுகின்ற எழுத்துகளை உடையதாலும்

வேலை யார்வதினால் – வேலைப்பாடு உள்ளதாலும்

மிக்க அன்பர் முக்கியமாய்க் கைக் கொளலால் – பல அன்பர்கள்
முக்கியமாகக் கையில் வைத்துக்கொள்வதினாலும்

என்றும் அமைந்து, கைக்கடிகாரம் திருமாலுக்குச் சமம் என்று பொருள் தரும் இருபொருள் சிலேடையாக இப்பாடல் விளங்குகிறது.

இவை போன்று சிலேடையில் என்றும் அமைந்த சில பழந்தமிழ்ப் பாடல்கள் நம் தமிழ்ச்சொல்லின் இனிமையையும் வளமையையும், புலவர்களின் சொல்லாளுமையையும் விளக்கும் சான்றாதாரங் களாய் உள்ளன. அவற்றை நாமும் உணர்ந்து சுவைத்து நாளைய தலைமுறைக்கும் எடுத்துரைத்து மொழிவளம் காப்போம்.

– பொறுப்பாசிரியர்

# சித்த மருத்துவம்

– ஒரு விளக்கவுரை



விண்

அகத்தியர், புலத்தியர், திருமூலர், கொங்கணர், போகர், புலிப்பாணி, தேரையர், சிவவாக்கியர், யூகிமுனிவர் முதலிய சித்தர்களால் தோற்றுவிக்கப்பட்டு ஏறத்தாழ 5000 ஆண்டுகள் தொன்மையான இந்திய பாரம்பரிய மருத்துவம் சித்த மருத்துவம் ஆகும். தமிழர் நாகரிகத்தோடும் பண்பாட்டோடும் இயைந்து தோன்றி வளர்ந்த தமிழர் மருத்துவம் ஆகும். வாதம், வைத்தியம், யோகம், ஞானம் என்ற 4 பெரும் பிரிவுகளை உள்ளடக்கிய இம் மருத்துவத்தைத் திருமூலர் கீழே கூறியவாறு வரையறுக்கிறார்.

‘‘மறுப்பது உடல் நோய் மருந்தெனலாகும்
மறுப்பது உள நோய் மருந்தெனச் சாலும்
மறுப்பது இனி நோய் வாராதிருக்க
மறுப்பது சாவையும் மருந்தெனலாமே’’

ஆக உடல் நோய், மன நோய்களுக்கு மருத்துவமாக அமைவது மட்டுமின்றி நோய் வராமல் தடுப்பதற்கும், இறுதி அடியில் கூறியபடி நரை, திரை, பிணி, மூப்பு, சாக்காடு இவை நம்மை நெருங்கிவிடாதபடி நம் இளமையைப் பாதுகாத்து நீண்ட காலம் நல்ல உடல்நலத்துடன் வாழச் செய்யும் காயகற்பமாகவும் விளங்குவது சித்தமருத்துவமாகும்.

“மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று’’ (குறள்.941)

என்ற குறளின் கூற்றுப்படி, வளி (வாதம்), அழல் (பித்தம்), ஐயம் (கபம்) ஆகிய மூன்று உயிர்த்தாதுக்களும் (VITAL LIFE FACTORS) தத்தம் அளவில் கூடியோ குறைந்தோ தத்தம் சமநிலை கெடும்போது அவைகள் மூன்று தோடங்களாகி (THREE HUMOURS) நோயை உண்டாக்கும். மண், நீர், தீ, காற்று, விண் ஆகிய ஐம்பூதங்களால் (FIVE ELEMENTS) ஆகிய நம் உடம்பில் அதே ஐம்பூதங்களின் கூறுகளால் உண்டான வாதம் (காற்று + விண்), பித்தம் (தீ) மற்றும் கபம் (மண்+ நீர்) ஆகிய உயிர்த்தாதுக்களைக் குற்றமின்றிப் பராமரிக்கும் ஆறு சுவைகளாகிய இனிப்பு (மண் + நீர்), புளிப்பு (மண்+ தீ), உவர்ப்பு ( நீர்+ தீ), கைப்பு (காற்று + விண்), கார்ப்பு (காற்று + தீ), துவர்ப்பு (மண் + காற்று) ஆகியவற்றைக் கொண்ட நம் “உணவே மருந்து; மருந்தே உணவு’’ என்ற அடிப்படைக் கொள்கையைக் கொண்டது சித்த மருத்துவம். ஆக நாம் அன்றாடம் உண்ணும் உணவு வகைகளும் நோயைத் தடுக்க அல்லது போக்க உதவும் சித்த மருந்துகளும் அறுசுவைகளை அடிப்படையாகக் கொண்டவை .



மரு. இராமசுவாமி
சித்த மருத்துவர்

இவ்வாறான ஆறு சுவைகளைக் கொண்ட உணவுப் பொருட்களை எந்த விகிதாசாரத்தில் எந்த வடிவத்தில் பருவகாலத்திற்கு ஏற்றபடி உண்டு வந்தால் நோய் ஏற்படாத வண்ணம் மூன்று தோடங்களும் சமநிலை கெடாமல் பராமரிக்கப்படும் என்பதனைச் சித்த மருத்துவம் தெளிவாக விளக்குகிறது. இதனையே வள்ளுவரும்,

“மாறு பாடில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறு பாடில்லை உயிர்க்கு’’ (குறள்: 945)

என்று கூறுகிறார். எனினும் உண்ணும் உணவில் ஏதேனும் மாறுபாடுகள் ஏற்பட்டு, தோடங்களின் சமநிலைகெட்டு, நோய் ஏற்படும் போது அந்நிலையைச் சரிசெய்யும் பொருட்டுச் சித்த மருத்துவத்தில் திரிதோட சமனப் பொருட்களாகிய சுக்கு, மிளகு, சீரகம்,

வெந்தயம், ஏலம், மஞ்சள், காயம், பூண்டு இவற்றைக் குறிப்பிட்ட அளவில் அன்றாட உணவில் சேர்த்துக் கொள்ளும்படி கூறப்பட்டுள்ளது. இவற்றையே நம் முன்னோர்கள் சமையலறையில் "அஞ்சறைப் பெட்டியில்" வைத்திருந்தனர். இவைகளை நோய்த் தடுப்பு ஆற்றலை ஊக்குவிக்கும் பொருட்கள் (IMMUNE BOOSTERS) எனலாம்.

சித்தர்கள் கூறிய மூலிகை, தாது மற்றும் சீவப் பொருட்களால் ஆன காயகற்ப மருந்துகளும் (கற்ப அவிழ்தங்கள்), யோகப்பயிற்சி முறைகளும் (கற்பயோகம்) நமது நோய்த் தடுப்பு ஆற்றலை அதிகரித்து நோய் வராமல் தடுக்கவும், வந்த நோயைப் போக்கவும் உதவுகின்றன.

நோயைக் கணிக்கும் 8 வகை உத்திகளான நாடி, பரிசம், நா, நிறம், மொழி, விழி, மலம், மூத்திரம் இவற்றோடு மணிக்கடைநூல், பஞ்சபட்சி ஆகியவையும் வர்மம், தொக்கணம் முதலிய புறச்சிகிச்சை முறைகளும் சித்த மருத்துவத்திற்கே உரிய தனிச்சிறப்புகளாகும். சித்த மருந்துகளை 32 அக மருந்துகளாகவும் (எ.டு.குடிநீர், சூரணம், இளகம், மணப்பாடு, குளிகை, பற்பம், செந்தூரம்), 32 புற மருந்துகள்மற்றும்சிகிச்சை(பரிகரிப்பு)முறைகளாகவும் (எ.டு. தொக்கணம், வேது, பொட்டணம், ஒற்றடம், கலிக்கம், சுட்டிகை) வகைப்படுத்தியுள்ளனர். இவை தவிர உயர் வரிசை மருந்துகளான கட்டு, களங்கு, உருக்கு, சத்து ஆகியவை சித்த மருத்துவத்திற்கு மட்டுமே உரிய தனிச் சிறப்புகளாகும். "முப்பு" என்ற சித்த மருத்துவத்தின் மணிமகுடமானது வைத்திய முப்பு, யோக முப்பு, ஞான முப்பு என்ற 3 பிரிவுகளாக உரைக்கப்பட்டுள்ளது

"வேருபாரு தழைபாரு மிஞ்சினக்கால் பற்ப செந்தூரம் மரமே" என்ற சித்தர்கள் கோட்பாட்டின்படி சித்த மருத்துவர்கள் மூலிகை மருந்துகளையும் (எ.டு. கபசுரக் குடிநீர்) தாதுக்கள் மற்றும் பாடாணங்களால் ஆன மருந்துகளையும் (எ.டு. தங்கபற்பம், வெள்ளைப் பாடாணம், இரசகந்திமெழுகு), சீவப்பொருட்களில் தயாரிக்கப்படும் மருந்துகளையும் (எ.டு. ஆமையோட்டுப் பற்பம், மயிலிரகாதிச் சூரணம்), கடல்படு திரவியங்களால் ஆன மருந்துகளையும் (எ.டு. முத்துபற்பம், உப்புச் செந்தூரம்), நவமணி களினாலான மருந்துகளையும் (எ.டு. பவழச் செந்தூரம்) பயன்படுத்தி அரிய வகை நோய்களையும் குணப்படுத்திவருகிறார்கள்

சித்த மருத்துவமானது தொன்மையானது என்றாலும் தற்காலத்திற்கும் ஏற்ற மருத்துவம் என்பது அறிவியல் பூர்வமாக ஆய்வுகள் மூலம் நிரூபணமாகி வருவதைக் காண்கிறோம்.

தற்காலத்தில் நவீன மருத்துவ உலகிற்கு சவாலாக விளங்கிவரும் டெங்கு சுரம், சிக்கன் குனியா, கோவிட் 19 போன்ற நோய்களுக்கும் கூட சித்த மருத்துவம் தீர்வாக விளங்கி வருவது அதனுடைய மேன்மையைப் பறைசாற்றுகிறது. இத்தகைய சிறப்புகள் வாய்ந்த சித்த மருத்துவமானது நமது மத்திய மாநில அரசுகளால் அங்கீரிக்கப்பட்டு சித்த மருந்துகளை உலகம் முழுவதும் ஏற்றுக் கொள்ளும் வகையில் நவீன அறிவியல் ஆராய்ச்சிகளுக்கு உடபடுத்தி அவற்றின் செயல்திறனையும் பாதுகாப்பையும் நிரூபிக்கத் தேவையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இத்தகைய மருத்துவமானது நமது நாட்டின் பாரம்பரிய மருத்துவ முறையாகுமேயன்றி (Indian Traditional system) நமக்கு இது மாற்று மருத்துவம் (Alternate Medicine) அன்று. அவ்வாறு அழைப்பது தவறாகும்.

சித்த மருத்துவமானது நோய்களைத் தடுக்கக்கூடிய அல்லது நீக்கக்கூடிய மருந்துகளை மட்டும் குறிப்பதன்று. அது ஒரு நோயில்லா வாழ்வியல் நெறியாகும். எடுத்துக்காட்டாக, ஆறு மாதத்திற்கு ஒருமுறை வாந்தி மருந்தையும், நான்கு மாதங்களுக்கு ஒருமுறை பேதி மருந்தையும், ஒன்றரை மாதத்திற்கு ஒருமுறை நசிய மருந்தையும் (மூக்கிலிடும் மருந்து) கொள்வதோடு வாரத்திற்கு ஒருமுறை சவரம் செய்யவும், நான்கு நாள்களுக்கு ஒருமுறை கண்களுக்கு மையிடுவதையும் வலியுறுத்துகிறது.

நாம் வசிக்கும் வீடு, வசிப்பிடம், சுற்றுச்சூழல் பராமரிப்பு, அன்றாட நடைமுறைகள், பருவகாலத்திற்கு ஏற்ற உணவு, உடை முதலியன பற்றிய நெறிமுறைகள் உடல், மனம், ஆன்மாவின் இயக்கங்களை விவரிக்கும் 96 அடிப்படைத் தத்துவங்கள் அல்லது கருவிகள் பற்றிய செய்திகளை எல்லாம் உள்ளடக்கிய சித்த மருத்துவம் நாம் நோயற்ற பெருவாழ்வு வாழ வழிசெய்யும் மருத்துவம் என்பதனை நாம் உணர வேண்டியது அவசியமாகும்.

பேரா. மரு. ஆர்.எஸ். இராமசுவாமி
முன்னாள் தலைமை இயக்குநர்
மத்திய சித்த மருத்துவ ஆராய்ச்சிக் குழுமம்
முன்னாள் பேராசிரியர், முதல்வர் மற்றும்
மருத்துவமனைக் கண்காணிப்பாளர்
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்
ஆயுஷ் அமைச்சகம், இந்திய அரசு

❖



# துரவு – தெரிந்து கொள்வோமே...

**ஊ**ரிலுள்ள ஒரு நிலக்கிழாரைப் பார்த்து, ''அவருக்குத் தோட்டம், துரவு எல்லாம் இருக்கு...''– என்று சொல்வதைக் கேட்டிருப்போம்.

'தோட்டம்'– சரி. அது என்ன, 'துரவு'... ?

பெரிய அளவில் பாசனத்துக்குப் பயன்படும் கிணறுதான், 'துரவு'.

இன்று, ''துரவு''– என்ற சொல்லையே நாம் துறந்துவிட்டோம்.

இதன் நீள அகலம், 1 : 1, 1 : 2, 1 : 3 என்ற விகிதத்தில் அமைய வேண்டும் என விளக்குகிறார் கொடுமுடி ச. சண்முகம்.

'கிணறு தோண்டுதல்'– முதலிய கட்டு மானங்களை விளக்கும், 'மயமதம்'– எனும் ஒரு பொறியியல் நூல் நம்மிடம் இருந்ததாக இவர் குறிப்பிடுகிறார்.

அகலமான கிணறுகள் மட்டுமன்றி, ஆழமான கிணறுகளும் நம்மிடம் இருந்தன.

'நெடுங் கிணற்று வல் ஊற்று உவரி தோணி' – (97–98) என்கிற, 'பெரும்பாணாற்றுப்படை' வரி, தொண்டை மண்டலத்தில் ஆழமாகத் தோண்டப்பட்ட கிணற்றைப் பற்றிக் கூறுகிறது.

இதேபோல் கிணறு வெட்டும் ஆடவர்கள், தீப்பொறி உண்டாகப் பாறைகளை வெட்டி பாலை நிலத்தில் கிணறு தோண்டியிருந்த காட்சியை, 'வன்புலம் துமியப் போகிக்' என அகநானூறு (79:6) விவரிக்கிறது. ஆனால், இவ்விரு பாடலுமே ஒரே செய்தியைத் தெரிவிக்கின்றன. இப்படித் தோண்டப்பட்ட கிணற்றில், உவர்நீர்தான் கிடைத்தது என்பதே அது. இது பாறையின் தன்மையினால் ஆனது.

இன்றும் புதுக்கோட்டை மாவட்டத்தின் மிக வறண்ட பகுதிகளில், 'காராளன் கிணறு'– என்றழைக்கப்படும் பாசனக் கிணறுகள் உள்ளன.

" பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்

சிரறு சில ஊறிய நீர்வாய்ப் பத்தல் கயிறு குறு முகவை மூயின மொய்க்கும்''.

(மூன்றாம் பத்து – பாட்டு 22: 12–14)

– என்கிற, 'பதிற்றுபத்துப் பாட்டில்' வேறொரு கிணற்றைப் பற்றிய காட்சி விளக்கப்படுகிறது.

'கரும்பொன்' – எனும் இரும்புக் கோடரியால், வன்மையான பாறை நிலத்தை உடைத்துத் தோண்டப்பட்டமையால், கற்பாறைகள் ஒழுங்கின்றி உடைந்து, சிதறி சிறிதளவே நீர் ஊறுகிறது. அதில், 'முகவை'– எனும் மரத்தால் செய்த, நீர் முகக்கும் கருவி ஒரு நீளமான கயிற்றால் பிணைக்கப்பட்டு, நீர் இறைக்கப்படும் காட்சி விளக்கப்படுகிறது. இங்குள்ள பத்தல் எனும் சொல் கவனத்துக்குரியது. இதை, 'உட்கிணறு' எனக் கொள்ளலாம். மேலே அகலமாக அகழ்வதைக் 'கூவல்'– என்றும் அக்கூவலுக்குள்ளே ஆழமாய் அகழ்வதைப் 'பத்தல்'– என்றனர். இது கொங்குப் பகுதியில் 'பிள்ளைக் கிணறு'– என்று அழைக்கப்பட்டது.

இதுதவிர தமிழகத்தின் பிறபகுதிகளில், குளம் ஏரிக்கு நடுவில் அமைந்த கிணற்றுக்கும், ''பிள்ளைக் கிணறு''– என்ற பெயர் இருந்தது.

மணற்பாங்கான இடங்களில், குறிப்பாகச் சோழநாட்டின் ஆற்றுப்பகுதிகளில் அமைக்கப்பட்ட கிணறுகள், ''உறைக்கிணறு''– என்றழைக்கப்பட்டன.

மணலில் தோண்டுவது எளிதன்று. மணல் சரிந்துக் கொண்டே இருக்கும். களிமண்ணால் வட்டைகள் செய்து சுட்டு, அவற்றை உறைகளாகப் பயன்படுத்தியுள்ளனர். மேற்பகுதி மண்ணைத் தோண்டியெடுத்துவிட்டு, மணல் பகுதியில் வட்டையை வைப்பர். வட்டையின் உட்பக்கமுள்ள மணலைத் தோண்டியெடுப்பர். உறை கீழே இறங்கும். பின் அடுத்த உறையை வைப்பர். உறையின் வாய்ப்பகுதி சற்றே

பெரிதாகவும், வால்பகுதி அதனுள் செல்லுமாறும் இருக்கும். பின் உறைக்குள் இருக்கும் மணலைத் தோண்டுவர். இவ்வாறு தொடர்ந்து தண்ணீர் சுரக்குமளவுக்குப் பல உறைகளை இறக்கிக் கொள்வர்.

இவ்வாறு, பல வகையான கிணறுகள் தமிழகத்தில் இருந்திருக்கின்றன.

‘‘கிணறு’’– என்று பொருள் தரும் சொற்களுக்குத் தமிழில் வறுமையில்லை.

பாறையைக் குடைந்து செய்யும் குடைக்கிணறு, ‘‘குமிழி’’– எனப்பட்டது.

சரளை நிலத்தில் வெட்டப்பட்டுச் சுற்றிலும் கல் மற்றும் செங்கல்களால் அகச்சுவர் கட்டிய கிணறு, ‘‘கட்டுக்கிணறு’’– எனப்பட்டது.

‘‘கேணி’’– என்றால், ஆழமும், அகலமும் உள்ள பெருங்கிணறு.

கடலருகே தோண்டிய கிணறு, ‘‘ஆழிக்கிணறு.’’ கடற்கரை ஓரங்களிலும், திருச்செந்தூர் கோவிலருகிலும் இதைக் காணலாம்.

இறங்கிச் செல்லும் படிக்கட்டுகளுடன் அமைந்த பெருங்கிணறு, ‘‘நடைகேணி’’– ஆகும். இதன் மாதிரிகளைக் கங்கை கொண்ட சோழபுரம், திருவிடைமருதூர் கோவில்களில் காணலாம்.

ஊற்றுக்கால் கொப்பளித்துக்கொண்டே இருக்கும் கிணறு, ‘‘பொங்கு கிணறு’’– ஆகும். அதாவது, ஆர்ட்டீசியன் கிணறு. (ஆர்ட்டீசியன் ஊற்றுக்கு, ‘‘குமிழி ஊற்று’’– என்ற பெயரும் உண்டு)

‘‘பூட்டைக் கிணறு’’– என்பது கமலை நீர்ப் பாய்ச்சும் அமைப்புள்ள கிணறாகும்.

ஏற்றம் வைத்து நீர் பாய்ச்சும்போது ஏற்றம், குற்றேற்றம், நெட்டேத்தம், கூடையேற்றம், பெட்டி இறைப்பு, கமலை, ஆளேற்றம் என இவற்றில் பலவகைகள் இருந்தன.

கோடையில், ஆற்றில் அல்லது ஆற்றங்கரையில் அவ்வப்போது தோண்டப்பட்ட கிணறு, ‘‘தொடுகிணறு’’– எனப்பட்டது.

காவிரி கடைமடைப் பகுதியில் ஆற்றோரத்தில் தோண்டப்பட்டுக் காய்கறி பாசனத்துக்குப் பயன்பட்ட கிணற்றை, ‘‘துலவாக்குழி’’– என்பர். துலவம் என்பது ஏற்றத்தில் பயன்படும் நீண்ட மரத்துண்டைக் குறிக்கும்.

❖

# தாம்பரம் சனோடாரியம் தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தில்

## தமிழ் சித்த மருத்துவக் கலைச்சொல் கலந்தாய்வுக் கூட்டம்!

"

உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே

– திருமூலர்

"



24.09.2020ஆம் நாள், தாம்பரம் சனோடாரியம் தேசிய சித்த மருத்துவ நிறுவனத்திற்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககக் குழுவினர் நேரில் சென்று சித்த மருத்துவக் கலைச்சொற்களைப் பற்றி கலந்துரையாடல் செய்தனர். தமிழ் மொழியையும் தமிழரின் வாழ்வியல் நெறிமுறைகளையும் அடுத்த தலைமுறையினருக்குக் கொண்டு செல்லும் நோக்கில் நடைபெற்ற இந்தக் கலந்தாய்வுக் கூட்டத்தில் தலைமையுரையாற்றிய மருத்துவமனையின் இயக்குநர், பேராசிரியர் மரு. இரா. மீனாகுமாரி அவர்கள், தமிழ் மருத்துவமாம் சித்த மருத்துவக் கலைச் சொற்களை முறையாகச் செம்மைப்படுத்தி அகராதியாக உருவாக்க வேண்டும் எனவும், அச் சொற்கள் சித்த மருத்துவ மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் அமைய வேண்டும் எனவும், வாழ்வியல் நெறிமுறைகளைப் பின்பற்றும் வகையிலும் தமிழ் மற்றும் சித்தமருத்துவத்திற்குரிய தொன்மையைப் போற்றும் வகையிலும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தோடு இணைந்து புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும் என்றும் தெரிவித்தார்.

மேலும் சித்த மருத்துவ நூல்களில் உள்ள மருத்துவப் பாடல்களுக்குப் பொருள் புரியும் வகையில் தமிழ் வல்லுநர்களைக் கொண்டு மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும் என்றும், மாதந்தோறும் வெளிவரும் ‘சொல் வயல்’ மின்னிதழில் சித்த மருத்துவத்திற்கு என்று ‘சித்தர்களின் வாழ்வியல் முறைகள்’ பற்றிய செய்திகளை வெளியிட ஒரு பக்க அளவில் ஒதுக்கீடு செய்து தர வேண்டும் என்றும், தமிழ் சித்த வாழ்வியல் நெறிமுறைகளை அடுத்த தலைமுறையினருக்குக் கொண்டு செல்லும் வகையில், குறிப்பாகப் பெண்களுக்கு விழிப்புணர்வு வழங்க வேண்டும் என்றும் தனது விருப்பத்தினைக் கோரிக்கையாகத் தெரிவித்தார்.

கூட்டத்தில் பேசிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட




இயக்கக இயக்குநர் திரு. தங்க. காமராசு அவர்கள் 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் குறித்துச் சிறப்புற எடுத்துரைத்ததோடு, இயக்ககத்தில் செயற்பட்டு வரும் தமிழ்க் கலைக் கழகத்தின் கலைச்சொல்லாக்க முறைகள் பற்றியும், அச்சொற்களைச் சொல்லாக்க வல்லுநர் குழுவால் செம்மைப்படுத்திப் பொதுமக்களின் பயன்பாட்டுக்கு வழங்கும் முறைகள் பற்றியும் எடுத்துரைத்தார். மேலும் சித்த மருத்துவக் கலைச் சொற்களைச் செம்மைப்படுத்திச் சேகரிக்கும் நோக்கில் தாம்பரம் சனோடாரியம் தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தின்கீழ் செயல்பட்டுவரும் அயோத்திதாசப் பண்டிதர் மருத்துவமனை வளாகத்தில் 'சொல்உண்டியல்' வைத்து, சிறந்த கலைச்சொற்களை வழங்குவோருக்குப் பரிசும் பாராட்டுச் சான்றிதழும் வழங்கிச் சிறப்பிப்பதாகத் தெரிவித்தார்.

இக்கலந்துரையாடலில் தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தின் இணை இயக்குநர் (நிருவாகம்) திரு.சு.ம. முருகன், சிறப்பு மருத்துவத்துறைத் தலைவர் பேராசிரியர் மரு.ந.ஜெ. முத்துக்குமார், குழந்தை மருத்துவத்துறைத் தலைவர் (ம) முதல்வர் (பொறுப்பு) பேராசிரியர் மரு. ம. மீனாட்சி சுந்தரம், நோய் நாடல் துறைத்தலைவர் (ம) மருத்துவமனைக் கண்காணிப்பாளர் (பொறுப்பு) பேராசிரியர் மரு. ஞா.ஜா. கிறிஸ்டியன், மருத்துவத்துறைத் தலைவர் (பொறுப்பு) இணைப்பேராசிரியர் மரு.தி.லெட்சுமிகாந்தம், நஞ்சு மருத்துவத்துறைத் தலைவர் (பொறுப்பு) இணைப் பேராசிரியர் மரு.இரா. மாதவன், குணபாடம் துறை இணைப் பேராசிரியர் மரு.ச.சிவக்குமார், துணை மருத்துவமனைக் கண்காணிப்பாளர் மரு.இராதிகா மாதவன் உட்பட பலர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

முதல்முறையாக, தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தின் மருத்துவமனை வளாகத்தில் 'சொல் உண்டியல்' நிறுவி, தமிழ் சித்த மருத்துவக் கலைச் சொற்களைச் சேகரித்துச் சொற்குவையில் இணைத்திட வகை செய்யவும், தமிழ் சித்த மருத்துவக் கலைச்சொற்கள் சார்ந்த தனிக் கருத்தரங்கம் மற்றும் இணையவழிக் கருத்தரங்குகளை நடத்துவது குறித்தும் இக்கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

❖

# சொல்லாக்க உத்தி!



புலவர் வெற்றியழகன்

தமிழ்மொழியில் சொல்லாக்க உத்திகளை எவ்வாறெல்லாம் கையாளலாம்? அவற்றை உண்டாக்கும் பல்வேறு உத்திகள் தொல்காப்பியத்தில் கூறப்பெற்றுள்ளன. அவற்றின்வழி உண்டாக்குதல் வேண்டும். அவைதாம் நிலைத்து நிற்கும்; காலத்தினை வென்றெடுக்கும். சொல்லை ஆக்கும் பொழுது அல்லது அமைக்கும்பொழுது, நீளமான சொற்றொடராக உள்ளவற்றைக் கலைச்சொல்லாக உருவாக்குவது; நீளமான சொல்லைக் குறுகிய சொல்லாக ஆக்குவது; கடினமான சொல்லாக இல்லாமல் எளிமையான சொல்லாக உருவாக்குவது; எல்லாவற்றையும் தமிழ் வேர்ச்சொல்லின் அடிப்படையிலேயே உருவாக்குவது என்பன போன்ற உத்திகளைக் காண்போம்.

**பொருளுரை**

சொல்–என்பதற்கு நெல், சோறு, வாய்ச்சொல் என்னும் பொருள்களுமுண்டு. தமிழர் உண்டாக்கிய எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே. காரணமின்றி ஒரு சொல்கூட தமிழில் இல்லை. வாய் என்றால் வழி என்று பொருள். அந்த வழியில் உள்ளே செல்வது உணவு; அதுவும் சொல்; வாயின் வழியே வெளியே வருவது பேச்சு என்னும் சொல்.

எழுத்துகளால் ஆனது சொல். எழுத்துத் தனித்தும் இணைந்தும் நின்று பொருள் தரும். அப்போதுதான் அது சொல் எனப்பெறும். சொல்லாக்கத்தினைத் தொல்காப்பியர் கிளவியாக்கம் என்கிறார்.

“சொற்கள் பொருள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர்த்தாயிற்று” என்கிறார் இளம்பூரணர்.

“வழுக்களைந்து சொற்களை அமைத்துக் கொண்டமையால், கிளவியாக்கம் ஆனது” என்று சேனாவரையர் கூறியுள்ளார்.

“சொற்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து பொருள் தரும் நிலைமையைக் கூறுவது கிளவியாக்கம்” என்று நச்சினார்க்கினியர் கூறியுள்ளார்.

**இயற்கைப் பொருள்**

உலகில் உள்ள பொருள்கள் இருவகையாகும். ஒன்று இயற்கைப் பொருள்; மற்றொன்று செயற்கைப் பொருள்.

இயற்கைப் பொருள்: நிலம், நீர், நெருப்பு, வளி, வான் உள்ளிட்டவை. இவற்றைச் சொல்லாக்கிக் கூறும்பொழுது காரணம் சேர்த்துக் கூறுதல் வேண்டா; இயற்கைத் தன்மையை வெளிப்படுத்துமாறு கூறுதல் வேண்டும்.

நீர் குளிர்ச்சி உடையது; நெருப்பு வெப்பமுடையது; காற்று அசைத்தல் உடையது; உயிர் உணரும் தன்மை உடையது; நிலம் வன்மை உடையது என்றுதான் கூறுதல் வேண்டும். இதனைத் தான் தொல்காப்பியர்:–

“இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்”

(தொல்.சொல்.502)

என்று கூறியுள்ளார்.

**செயற்கைப் பொருள்**

செயற்கைப் பொருளைக் கூறும்பொழுது ஆக்கச் சொல்லைச் சேர்த்தே கூறுதல் வேண்டும். செயற்கைப் பொருள் ஏதாவதொரு காரணத்தால் தனது தன்மை திரிந்து விடும் அதனால், நீர் சூடாயிற்று; வழி அகலமானது; பயிர் நல்லவாயின என்று ஆக்கச்சொல்லை அதாவது காரணத்தினையும் சேர்த்தே சொல்லுதல் வேண்டும். இதனைத் தொல்காப்பியர்: –

“செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்”

(தொல் .சொல்.503)

என்று தெளிவுபடுத்துகின்றார்.

**பன்மைக்கு உரியவை தொகுதி ஒருமை**

கண், தோள் உள்ளிட்ட பன்மைக்கு உரிய உறுப்புப் பெயர்களைப் பன்மை சுட்டிக் கூறத்தேவையில்லை. வினையை வைத்துக் கொண்டே ஒருமையா– பன்னமயா என்பவற்றை அறிந்து கொள்ளலாம்.

“கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறும் கடப்பா டிலவே
தம்வினைக்கு இயலும் எழுத்தலங்க கடையே!

(தொல்.சொல்.545)

என்று தொல்காப்பியச் சொல்லதிகாரம் கூறுவதிலிருந்து சொல்லாக்க உத்தித் தெளிவு பெறுகின்றது.

கண் பார்த்தது என்று எழுதினாலே கண் பார்த்தன என்றுதான் பொருள்; கண்கள் பார்த்தன என்று எழுதத்தேவையில்லை. ஒரு கண் ஒரு பொருளையும் மறு கண் வேறு ஒரு பொருளையும் பார்க்காது.

கால் நடந்தது என்று எழுதினாலே போதும்; கால்கள் நடந்தன என்று எழுதத்தேவையில்லை. இடக்கால் வடக்கு நோக்கியும் வலக்கால் தெற்கு நோக்கியும் நடக்கா. காது கேட்டது என்று எழுதினாலே போதும். காதுகள் கேட்டன என்று எழுதத்தேவையில்லை.

**சாதி ஒருமை**

சாதி என்னும் சொல் தொல்காப்பியப் பொருள்படி பல பிரிவுகளை ஒன்றடக்கிய ஒரு சொல்லாகும். நாம் ஒரு பிரிவை ஓராயிரம் பிரிவுகளாக ஆக்கிக்கொண்டதன்று.

“நீர்வாழ் சாதியுள் அதுபெறற் குரிய”

(தொல்.மரபு.1543)

நீரில் வாழ்வனவாகிய சுறா, முதலை, வரால், வாளை உள்ளிட்டவற்றின் ஆண்பாலையும் போத்து எனச் சொல்லாம்.

“நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே”

(தொல்.மரபு.1564)

நீரில் வாழும் நத்தையின் பெண்ணையும் நாகு எனச் சொல்லலாம்.

**குறிப்பு**

மரம் விழுந்தது என்றால் மரம் ஒன்று என்றும்; மரம் விழுந்தன என்றால் மரம் பல என்றும் அறிந்துகொள்ளலாம். மரங்கள் விழுந்தன தேவையில்லை. எத்தனை மரம் விழுந்தன என்று வெளிப்படையாகத் தெரிய வேண்டுமா ? இரு மரம் விழுந்தன; மூன்று மரம் விழுந்தன என்று அஃறிணைப் பன்மை விகுதியாகிய “கள்” விகுதி இல்லாமலேயே எழுதலாம்.

பூ–வைப் பன்மையாக எழுதுவதற்கு என்ன செய்ய வேண்டும்: புழுவைப் பன்மையாக எழுதுவதற்கு என்ன செய்ய வேண்டும் என்று கேலியாக, கிண்டலாக வினவுகின்றனர். மரம் என்றாலே அது சாதியொருமைச் சொல்; பல இலக்கம் மரங்களை உள்ளடக்கிய ஒரு பொதுச்சொல். அதனைப் போன்றே “பூ” என்பது பல இலக்கம் பூவை உள்ளடக்கிய சாதியொருமையாகிய ஒரு பொதுச்சொல். புழு என்பதும் பன்னூறு வகையான புழுவை உள்ளடக்கிய ஒரு பொதுச்சொல்.

பூ மலர்ந்தது என்றால் ஒரு பூ; பூ மலர்ந்தன என்றால் பல பூ. இரு பூ மலர்ந்தன; மூன்று பூ மலர்ந்தன.

புழு நெளிந்தது என்றால் புழு ஒன்று ; புழு நெளிந்தன என்றால் பல புழு. இரு புழு நெளிந்தன; மூன்று புழு நெளிந்தன என்று அஃறிணைப் பன்மை விகுதியாகிய “கள்” இல்லாமலேயே எழுதலாம். கள் – வந்தால்தான் க் – மிகுதல் வேண்டுமா ? தேவையில்லையா ? என்னும் சிக்கல் எழும்.

**சொல்லாக்க உத்தி**

தொல்காப்பியம் கூறும் சொல்லாக்க உத்தியின்படி தமிழின் வேர்ச்சொல் அடிப்படையில் – ஒரு சொல்லைப் புதியதாக உருவாக்கலாம்; பழைய சொல்லைப் பயன்படுத்தலாம்; பெரிய சொல்லைச் சிறிய சொல்லாகச் சுருக்கிக் கொள்ளலாம்.

கால்நடை மருத்துவர்; கால்நடை மருத்துவம்; கால்நடை மருத்துவக் கல்லூரி; கால்நடை மருத்துவப் பல்கலைக்கழகம் என்றெல்லாம் எழுதுவதில் ஒரு சிக்கல் இருக்கின்றது. நாமும் கால் நடைதாம்.

விலங்கு மருத்துவர்; விலங்கு மருத்துவம்; விலங்கு மருத்துவக் கல்லூரி; விலங்கு மருத்துவப் பல்கலைக்கழகம் என்று எழுதினால் பொருத்தமாக இருக்கும்.

மின் தூக்கி என்று ஏற்கெனவே ஆக்கப்பெற்றுள்ளது. அது தூக்கிக் கொண்டு மேலே மட்டும் போகவில்லை; கீழேயும் இறங்குகின்றது. அதனால் “மின் ஏந்தி” என்று எழுதினால் மிகப் பொருத்தமாக இருக்கும்.

நகரும்படி என்பதனைவிட – மின்படி என்று என்று எழுதினாலும் பொருள் பொருந்தும்; சொல் சிறியதாகவும் இருக்கும்.

ஓட்டுநர் என்று ஒரு புதிய சொல்லை உருவாக்கியிருக்கின்றோம். இதற்கு–நமக்கு முன்னோர் – “வலவன் ஏவா வானவூர்தி” என்று புறநானூறும்; “வலவன் ஏவா வானவூர்தி” என்று கம்ப இராமாயணமும் ஏற்கெனவே கூறியிருப்பதனால் “வலவன்” என்னும் சொல்லை ஏற்றுக் கொண்டிருந்தால் மிகச் சிறப்பாக இருந்திருக்கும்.

துகள்தான் – தூள் ஆனது.

கதுவுதல்தான் – காதல்

அகலமரம்தான் – ஆலமரம்

தொகுப்புதான் – தோப்பு – இவ்வாறு சொற்சுருக்கம் செய்யலாம்.

**முடிவுரை**

இவ்வாறெல்லாம் சொல்லாக்க உத்தியினைக் கடைப்பிடித்துத் தமிழ்மொழிக்கும் – தமிழினத்துக்கும் பெருமை சேர்ப்போமாக.

**– புலவர் வெற்றியழகன்**